இருவராநாமேகூடியிருந்தனமாகில்வேறங் .......... ✻
கொருவராலாவதுண்டோவுலகெலாநமதேயென்ன ...... ✻
வெருவியகழுதைதானும்விரும்பியேயிதன்பின்செல்லக் .... ✻
கருதியவோரியுஞ்சிங்கத்தின்முன்விட்டதம்மா ...... (சஉ)

கழுதையார்தம்மைச்சிங்கங்கண்டுதன்கைகளாரத் ........ ✻
தழுவியேமோந்துகண்டந்தன்னையுமுமித்துப்போட்டே .. ✻
பழுதநாஞ்செய்தோஞ்சந்திபண்ணியிம்மருந்தைக் கொள்வே
கழுதையைப்பழுதுறமற்காத்துநீயிருப்பாயென்றே (சங) [மீ

ஓரியைக்காவல்வைத்தேயொருசுனையருகிற்சென்று ....... ✻
பாரியசிங்கஞ்சந்திபண்ணியங்கிருக்குமுன்னே .......... ✻
ஓரியுமருந்தோவென்றங்குற்றதன்கண்ணுங்காதும் ...... ✻
ஈரிரண்டுறுப்புந்தின்றேயிருந்ததுபயந்துதூர ...... (சச)

சிங்முஞ்சந்திபண்ணிச்சென்றிதன்கண்களெங்கே ........ ✻
இங்கிதன்செவிகளெங்கேயென்றுதான்முடுகிக்கேட்க .... ✻
அங்கமெல்லாமுண்டாகிலகப்பட்டுந்திரும்பிப்போய்ப்பின் ✻
மங்கிடவிறக்கவிங்கேவரநினைந்திடுமோவென்ன ...... (சரு)

சிங்கமுங்கழுதையிரற்றின்னவுமில்லைவீணு ............ ✻
அங்கொருநரிதான்வஞ்சித்தழைத்துப்போய்க்கொல்லுவித்து
தங்குலவோரிக்கெல்லாந்தானிரைகொடுத்ததன்றே ...... [த்
பங்கமாயறிவிலாமற்பட்டதுகழுதைதானே ........ (சசு)

அப்படிநீயுமென்னையழைக்கினுன்வார்த்தைகேட்டே .... ✻
மெய்ப்படவாமோன்வந்தால்விரைந்துநீகொல்லுதற்குத் .... ✻
தப்பிலையினுதானிற்கத்தன்னுண்மைதன்னைச்சொலித் .... ✻
துப்பறுகுலாலன்கெட்டகதையொன்றுசொல்லக்கேளாய் .. ✻

(வேறு-குயவன்கதை.)

உதிட்டிரனெனுமொருகுயவனோர்சிறு ............... ✻
பதிக்கணேயுறைந்துமட்பாண்டஞ்செய்குவோன் ...... ✻
பிதிர்க்குமோடென்றுமன்பிறலாவிள .............. ✻
மதிப்பிள வெனவடுவயங்குநெற்றியான் ............ (சஅ)

கார்வளங்குன்றியேகாணும்பஞ்சத்தால்.................*
சீர்வளமொன்றுமோர்தேயத்தெய்தினன்..............*
போர்வளமொன்றுமந்நாட்டின்பூபதி.................*
வார்வளமொன்றிவன்வடிவைக்கண்டனன்............(சகூ)

கன்றியபோரின்முன்காயப்பட்டவன்..................*
என்றுசேனாபதிதலைமையீந்தனன்..................*
வன்றிறல்வேந்தனோர்வைகல்யார்பொரு.................*
தோன்றியவாளின்வெட்டிதாயென்றோதினான்....... (ருய)

இழித்திடுகுயவன்யானிதுவுமோவுறை.................*
கழித்தவாள்வெட்டன்றுகடத்தினேடுமுன் ...........*
இழித்ததென்றிடவுளநாணிக்கீழ்மையோய்..............*
பழித்தல்செய்வாரொனைப்பாரின்வேந்தரோ......... (ருக)

நீ துறுநின்குலந்தெரிவதற்குமுன்.....................*
போதுகவென்றிறைபுகலப்போரினில்.................*
யாதினுமெனைவேல்வாரில்லையாதலால்............ ....*
நீதியன்றென்னைநீநீக்கலென்றனன்................. (ருஉ)

நின்குலம்போரினினேர்வதன்றுநீ.....................*
கொன்படுசிறுநரிக்குட்டிபோற்றுளேல்................*
என்பயனென்னவக்கதையென்னெனலும்.................*
வன்புறுவேந்தனும்வகுத்துச்சொல்லுவான்.........(ருங)

(நரிக்குட்டிக்கதை.)

குட்டிகளிரண்டுடைக்கொடியகேசரி.....................*
பெட்டையைநோக்கியுன்பிள்ளைகட்குணத்..............*
தட்டறவீகுவன்றனிவிடாதுநீ ........ .................*
மட்டறுமன்பினால்வளர்த்தியாலென்றே..............(ருச)

உறுமுணவளித்துவாழ்நாளிலோர்தினம்...............*
சிறுநரிக்குட்டியைப்பற்றிச்சென்றிதைக்...............*
கறியெனக்கொள்கவென்றளிப்பக்கண்டிது ..............*
பெறுமழகுடைத்தெனப்பெட்டையெண்ணியே .... (ருரு)

குறியதங்குட்டிகளோடுங்கூட்டியே . . . . . . . . . . . . . . . . . *
நறியவூனுணவினைத்தந்துநாடொறும் . . . . . . . . . . . . . . . . *
பிறிவறவளர்த்திடவளர்ந்தபின்னொர்நாள் . . . . . . . . . . . . . *
அறிவுறுமூன்றுமங்கடவிபுக்கவே . . . . . . . . . . . . . . . (௫௬)

நண்ணியோர்கரிதனைநரியின்குட்டிதான் . . . . . . . . . . . . . *
கண்ணுறநோக்கியேயோடக்கண்டிடம் . . . . . . . . . . . . . . . *
அண்ணிமற்றிரண்டும்பின்னதனைநோக்கியே . . . . . . . . . . . . *
ஒண்ணுமோவோடுதலுனக்கென்றேசலும் . . . . . . . . . . . . (௫௭)

நரிபெறுகுட்டியும்வலியினுன்மிகப் . . . . . . . . . . . . . . . . *
பெரியனென்றுறுகலாம்புரியப்பின்பிதைப் . . . . . . . . . . . . . *
பரிவொடுவளர்த்தபெண்சிங்கம்பார்த்திது . . . . . . . . . . . . . *
தெரிவிலாதுரைத்தனைசெய்திகேளென . . . . . . . . . . . . (௫௮)

நீயொருசம்புவின்குட்டிநின்னைநான் . . . . . . . . . . . . . . . *
மாயவிலென்குட்டிகளொடும்வளர்த்தனன் . . . . . . . . . . . . . *
தீயநின்குலந்தனைத்தெரியினென்மகார் . . . . . . . . . . . . . . *
காய்வவொன்றுரைத்தலுங்கடிதினீங்கிற்றே . . . . . . . . . . . (௫௯)

களிப்புறவேற்றிதைக்கழறிநின்குலம் . . . . . . . . . . . . . . . . *
வெளிப்படாமுன்னர்நீவிரைந்துபோகென . . . . . . . . . . . . . . *
ஒளிப்பொடுகுலாலனுமோடினனென . . . . . . . . . . . . . . . . *
நளிப்புனன்முதலைதானவின்றதென்பவே . . . . . . . . . . . (௬௰)

சொன்னவம்முதலைக்குச்சுமுகவானரம் . . . . . . . . . . . . . . . *
கன்னியர்கிருத்திரமத்தைக்காணரி . . . . . . . . . . . . . . . . . *
தென்னலும்யாதிறலிசைக்கின்றியென . . . . . . . . . . . . . . . *
இன்னதாலென்றொருகதையிசைக்குமால் . . . . . . . . . . . . (௬௧)

(வேறு-கணவனைவஞ்சித்தகதை.)

மிக்கதாராவனத்தின்மேவுஞ்சத்ய . . . . . . . . . . . . . *
விரதனும்பாரப்பானுக்குரியதேவி . . . . . . . . . *
தொக்கபேருஞ்சண்டையிட்டுக்குடும்பந்தன்னைத் *
தூறுபுரியாளவண்மேலாசைகொண்ட . . . . . . *

தக்கபெருவேதியனுமவண்மோகத்தால்
சஞ்சாரஞ்செயநினைந்தோர்கானிற்சென்றான்
மைக்கணியநடையாலும்வெய்யிலாலும்
வருந்திநீர்வேண்டுமெனவாய்விண்டாளே (௯௨.)

பேதைநீயிங்கிருவென்றுரைத்துப்பார்ப்பான்
பெயர்ந்தனனீர்கொண்டுவருமுன்னேமாறு
சாதலும்விண்வாணிநின்றன்வயிற்பாதி
தருதியேலுய்வளென்ச்சாற்றக்கேட்டே
ஈதலுமங்கவள்பிழைத்தேயேகும்போதோ
ரிசைபாடுமுடவனைக்கண்டிச்சைவைத்து
வேதியநீதனிவிட்டுப்போம்போதெல்லாம்
வெருவேனிம்முடந்துணையாய்மேவினென்றாள் (௯௩)

இவள்கருத்தையறியாவேதியனுநன்றென்
றிம்முடவன்றனக்குஞ்சோறீந்துவந்தான்
அவளொருநாடுரவோரத்திலைப்பாய்த்தூங்கு
மந்தணனையதனில்விழத்தள்ளியிந்தப்
பவமுடவன்றனையெடுத்துக்கொண்டோர்நாட்டிற்
படர்ந்தனளந்நாட்டிறைவனிவளைப்பார்த்துக்
கவலையிலளாய்முடமாம்புருடன்றனைக்
காக்கின்றாள்கற்பின்மிக்காளெனவியந்தான் (௯௪)

தங்கையிவளெனமுறைகொண்டுடையுஞ்சோறுந்
தானளித்துவேந்திருக்கமறையோனுய்ந்தே
அங்குவரல்கண்டவளிறையைநோக்கி
யவனென்றுபுருடனுக்குப்பகைஞனென்ன
இங்கிவனைச்சிறையிடுமினென்னவேந்த
னியம்புதலுமறையவன்முன்னிகழ்ந்ததோதத்
திங்கணெடுங்குடைவேந்தனுண்மைதேர்ந்து
தெரிவைக்குத்தக்கதண்டஞ்செய்திட்டானே (௯௫)

(வேறு.)

அங்கவ்வேதியனைப்போக்கியரசனுமிருந்தான்வஞ்ச······ *
நங்கையர்தம்பேச்சுக்குநற்செவிகொடுக்கலாகா ···· ·· *
தங்கவர்சொற்குக்காதுகொடுத்தரசனுமமைச்சும்········*
பங்கமுற்றனர்களென்றுபகர்ந்தனன்குரங்குவேந்தன். (௬௬)

(மகளிர்சொற்கேட்டுமானமிழந்தகதை.)

முதலையக்கதையென்னென்னமுன்புநந்தனனென்வேந்தன் *
இதமுறுமனையாளுடவெத்திறச்சமாதானத்தும்········ *
சிதைவிலளாய்நீவாயிற்றிகழ்கடிவாளங்கொண்டுன் ···· ··*
முதுகின்மேலெனையெடுத்துமுற்படக்கனைத்தாயானால். (௬௭)

உன்னுடைதனக்குக்காதுகொடுப்பனென்றேதவப்போ ··*
தன்னவனவண்மோகத்தாலப்படிசெய்யக்கேட்டுத் ······*
தன்னிகரமைச்சனில்லும்பிணங்கிநீதலைமழித்துப் ········*
பின்னிடம்வலஞ்செய்தென்னைப்பெரிதுறப்பெட்டுமைந்து
[ம். (௬௮)
பரிவுடனிலத்திற்றோயப்பணிவையேலுனக்கென்னின்பம்··*
தருவனென்றிடவமைச்சன்சாற்றியவண்ணஞ்செய்தான் ·· *
வரருசியென்னுமன்னோன்மறுதினஞ்சபையினெய்த······*
அரசனீமுண்டியாயிங்கடுத்ததென்னென்றுகேட்டான். (௬௯)

மந்திரியரசனேநீர்வாசிபோற்கனைத்தலாலே·········· *
இந்தமுண்டிதமெனக்குமெய்தியதென்றுகூற············*
அந்தநற்சபையிலுள்ளோர்யாருமிவ்வாறுதேர்ந்து········*
புந்தியுணைகொண்டார்கள்புரவலனுணங்கொண்டான் (௭௰)

மாதர்களுடனேவினைப்பேசிலுமருவும்பாவம்········*
ஆதலாலில்லாட்கா நீயடுத்தெனைக்கொலைநினைத்தாய்······ *
தீததுவென்னும்போதுசெத்தனண்மனைவியென்று ···· *
கோதறுவன்மீனொன்றுகுறுகிநின்றுரைத்ததன்றே···· (௭௧)

தன்பிரிவாலிறந்தாடாரமென்றுரைக்கக்கேட்ட ········ *
வன்கராக்குரங்கைப்பார்த்துவானரவேந்தேநானும்···· *
புன்மைபெறுதலாலேபொல்லாங்குமடைந்தேனுன்னை····*
இன்மைசெய்திடநினைத்தேயிஷ்டனல்லேனுமானேன். (௭௨)

என்றிடக்குரங்குசொல்லுமெனைக்கொலநினக்குச்சொன்ன *
னன்றுநின்மனைவிதுட்டையாதலாற்றுயரங்கொள்ளேல் .. *
அன்றெனிற்பிறர்க்குடம்பட்டிருந்தவோரரிவைதன்னை ....*
நன்றுமுனரிசிரித்தநற்கதைபோலாமென்ன ........(எ௩)

(நரிசிரித்தகதை.)

சம்புதானெனவளைப்பார்த்துத்தானகைத்திட்டதென்ன .... *
சம்பகாவதியென்றோதுந்தக்கசீர்ப்பட்டணத்தில் ........*
சம்பமில்கிழவன்றேவதத்தனுஞ்சாவகாரி ..............*
சம்பகக்குழலியன்னான்றாரஞ்சோரஞ்செய்வாளே .... (எ௪)

பெண்டிழந்திடுமோர்தூர்த்தன்பெரிதுந்தன்னிடத்தி னேசங்
கொண்டதையறிந்தாள்வீட்டிற் கொட்டிவைத்திருந்தபொன்
கண்டெடுத்தவனைத்தேயங்காணவேயழைத்துக்கொண்டு[னைக்
வண்டிமிர்குழலாள்சென்றாள்வழியிலோராறுகண்டார். (எ௫)

பொருளைமாத்திரந்தான்கொண்டுபோகவேயவனினைத்தே *
அரிவைநீகட்டிக்கொண்டவாடைமுன்றனையெல்லாம் ....*
வெருவுறுதளிப்பையாகின்மிகுந்தநீராற்றைத்தாண்டி ....*
மருவவைத்திட்டுநின்னைவந்துபின்பழைத்துப்போவேன். எ௬.

என்னவப்படிசெய்யென்று ளெடுத்துக்கொண் டோடிப்போ
பின்னவனுணத்தாலேபெரிதனையமிழ்ந்துநீரில் .... [றன்
மன்னிநின்றனளப்போதோர்வனநரியிறைச்சிதன்னை ....*
அந்நதியருகேவைத்தங்கடுத்தமீன்றன்னைக்கௌவ... (எஎ)

மீனமுந்தப்பிற்றந்தவிறைச்சியைமேவியோர்புள் ......*
தானெடுத்தாகாயத்திற்பறந்ததுசம்புகந்தான் ...........*
வானினைப்பார்க்கமங்கைவானைப்பார்த்தாவதென்ன ... *
ஊனமிலரியாமோவென்றிசைக்கவந்நரிதான்பார்த்தே...(எஅ)

சோரனைநம்பியேநின்கணவனைத்துறந்ததேபோல் ......*
நாரியேயெனக்கும்வந்ததென்றதுநகைப்பவிவ்வா .......*
றோருமிங்கிவர்கள்வாக்குவாதஞ்செய்துறுங்கால்சாவு ....*
காரியுமிந்துமாலைக்கண்டித்துத்தள்ளிவிட்டான் .. (எ௯)

ஆகையாலில்லாள்சார்கைக்கில்லனீயுறுமதுன்றன் ....... ✽
சாகைசேரெனக்கராவுந்தன்னிடஞ்சென்றுபார்க்க ......... ✽
வாகைசேர்முதலையொன்றுமருவிடப்பார்த்துமீண்டே .. ✽
ஓகைசேர்குரங்கேயானுமுறைவிடந்தனக்குச்சென்றேன். ௮௰

வன்மைசெய்முதலையொன்றுவந்ததிலிருந்ததையா ...... ✽
இன்மைசெய்ததனைத்தள்ளவியம்புவாயுபாயமென்ன .... ✽
நன்மைசெய்சுமுகன்சொல்லுநன்றியைக்கொன்றபாவி .. ✽
புன்மைசெய்மூடனுக்குப்போதித்தாலென்னவன்றான் .. (௮௧)

(குரங்குகுருவிக்கூண்டைக்கலைத்தகதை.)

வீடுடையிவனைவீட்டையிழந்திடச்செய்வானென்ன ...... ✽
நாடுறுமுதலையந்தநற்கதையுரைப்பாயென்ன ........... ✽
நீடுறுகுரங்குசொல்லுநெடியதோர்பழுமரத்தில் ........ ✽
கூடுகொண்டனவிரண்டுதூக்கணங்குருவிதாமே ... (௮௨)

குளிரினடுங்கிவானக்கொடுமழையானனைந்து ......... ✽
நளிர்சுரத்தோடுதேகநடுங்கியேபற்கள்கிட்டி .......... ✽
வளமறுகுரங்கொன்றங்குவந்ததுகுருவிபார்த்தே ...... ✽
இளகியமனத்தினாலேயின்சொலாலென்றுசொல்லும். (௮௩)

கைகள்காலிருந்துமிந்தக்கன்மத்தையனுபவிக்குஞ் ...... ✽
செய்தியேனென்னஆசிமூஞ்சிகொள்கிறியமூடா ........ ✽
வைதுநீபுத்திசொல்லவல்லையோவெனக்கோபித்து ...... ✽
நெய்திடும்தன்றன்கூட்டைநெடுங்கையாற்பிய்த்ததன்றே.

ஆதலாற்கீழானோர்கட்காருபதேசித்தாலும் ............ ✽
தீதுறுமென்றுசொல்லச்சிஞ்சுமாரனுமுணாக்கும் ........ ✽
கோதுடையேனேனுங்கூறுவாயோருபாயம் ....... ✽
நீதியோவென்னச்சொல்லுநெடியவானரத்தின்வேந்தே. (௮௫

நின்பிணையொடுபோர்செய்துநீயிறந்திடிற்சுவர்க்கம் .... ✽
பின்பவன்பொருதிறந்தாற்பெரிதுநின்னிடங்கிடைக்கும் .. ✽
முன்பொருபுத்திசாலிமுறைமையினானுபோக்கும் ...... ✽
இன்பொடுசெய்தாற்போலவியற்றிடவேண்டுமென்றான். ௮௬

(நரிநால்வர்க்கும்நான்குபாயஞ்செய்தகதை.)

இறந்தயானையைத்தின்னவோரிகலனங்கெய்தச்.......... *
சிறந்தசிங்கமொன்றடைந்துநீயாரெனச்சிறியேன்....... *
மறங்கொணீகொன்றயானையைக்காத்திங்குவதிந்தேன்.... *
அறந்தவாச்சிங்கவரசனேயென்றதந்நரியே..........(௮௭)

ஈதுநான்கொன்றதன்றுநீகொள்கவென்றிசைத்துப்....... *
போதமற்றொருபுலிவந்துயாரெனநரியார்............. *
மாதுலாவிதைமடித்தகேசரியொன்றங்குளதால்........ *
ஓதுவேங்கையிங்குறிலெனக்குரையெனவொளித்தே. (௮௮)

என்னகாரணமதற்கெனில்வேங்கையொன்றெய்தி....... *
முன்னோர்யானையைக்கொன்றுதான்மூழ்கப்போங்காலைத்.. *
துன்னியெச்சிலாக்கியதெனச்சொல்லலும்வேங்கை....... *
பின்னொண்ணியேமருமகனேநினாற்பிழைத்தேன். (௮௯)

என்றுசொல்லிமுன்னோடியதுதன்பின்னோர்குரங்கு....... *
துன்றநோக்கியிக்கரியினைத்துண்ணெனக்கிழித்துத்....... *
தின்றுபோவெனக்குரங்கதைக்கிழித்ததுசிங்கம்.......... *
நன்றுவந்ததென்றுரைத்திடநடுங்கியோடியதே......(௯௰)

பக்குவஞ்செய்துகுரங்குபோதலுநரிபார்த்துத்......... *
தக்கதென்றுணப்போம்பொழுதொருநரிசார்ந்து......... *
கைக்கொளற்கெணவதையடித்தோட்டியேகடிதில்....... *
தொக்கவெம்பசிதொலைந்திடவுண்டதுநெடுநாள்.... (௯௧)

சாமபேதநற்றானதண்டஞ்செய்தசம்பு.............. *
தீமைநீங்கியதென்னநின்பகைவற்குச்செய்து......... *
நீமுயங்கிடத்திருந்திடுவேறிடநிற்கில்.................. *
நாமவெந்துயர்நணுகுமென்றிசைத்ததுகுரங்கு......(௯௨)

(நாயைக்கடித்தகதை.)

சிஞ்சுமாரனும்யாதினாலதுதெரித்திடுகென்............ *
றஞ்சியோதலுமயோத்தியிலிருக்குமோர்சுணங்கன்..... *
பஞ்சமெய்தலால்வேறொருதேசத்திற்படர்ந்து......... *
துஞ்சினீங்கியோர்மாதுதான்சோறிடவிருந்தே. .... (௯௩)

சிறிதுநாட்சென்றபின்பந்தத்திருமனைவிடுத்து ............ *
மறுகினுற்றிடமற்றைநாயாவுமேல்விழுந்தே ............ *
இறுதிவந்தெனக்கடித்தலுமெழுந்தஃதோடி ............ *
மறுவிலாததன்னகரிடைநொடியில்வந்ததுவே ...... (௯௪)

வந்தபின்னரவ்வூரிடைமருவியநாய்கள் ............ *
அந்தத்தேயநற்றேயமோவெனவகல்புவியுள் ............ *
எந்தத்தேயத்துநல்லதத்தேயநம்மினத்தில் ............ *
பந்தவொற்றுமையின்மையாற்பலித்ததிவ்விடரோ .... (௯௫)

ஆதலாற்றனதிடத்தினிலமர்ந்திடலினிதாம் ............ *
நீதியாலந்தமூதலையைநீவெற்றிகொள்வாய் ............ *
போதியென்றலுமூதலையும்போய்ப்பொருததனை ............ *
வீதல்செய்துதன்னிடத்தினின்மேவிவாழ்ந்ததுவே .. (௯௬)

அர்த்தநாசதந்திரம்




ஆக விருத்தம்-௯௱௰௪.



## ஐந்தாவது

# அசம்பிரோட்சியகாரித்வ தந்திரம்.

சுருதியந்தத்துந்தில்லைத்தொல்லைமன்றத்துமன்பர் ...... *
உருகுநெஞ்சத்துமாடலுகந்தபேரொளியைப்போற்றி .... *
மருவியபஞ்சதந்த்ர வகையின்முன்னான்குசொன்னோம் .... *
கருதருமசம்பிரோக்ஷயகாரித்வஞ்சொல்லுவோமே. ..... (௧)

ஐவகைத்தந்திரத்திலாதியோனாந்துயந்த ............... *
மெய்வகைமறையோன்சொல்லவேந்தனார்மைந்தரோர்ந்தே
செய்வகையுபாயமாந்தந்திரமெலாந்தெளிந்தோமையா .. *
கைவருமசம்பிரோக்ஷயகாரித்வஞ்சொல்லுகென்றார்..... (௨)

அரசனார்குமரர்கேட்கயாதொருகருமமேனும் ......... *
திரமொடுவிசாரியாமற்செய்யவொண்ணாதுசெய்தால் .... *
வரமிகுகீரிதன்னைவளர்த்ததைக்கொன்றுபின்னர் ....... *
தரணியின்மறையோன்வீழ்ந்துதவித்ததுபோலாமென்றான்.

என்னவக்கதையேதென்றாரெழில்பெறுகௌடதேச ... *
மன்னவன்றனக்குநித்தம்வந்துபஞ்சாங்கஞ்சொல்வோன் .. *
தன்னதுதேவிகர்ப்பந்தரித்திலளதனாற்கர்ப்பம் .......... *
என்னவோர்கீரிதன்னையெடுத்தவர்வளர்த்தார்மன்னோ. (௪)

புத்திரவாஞ்சையாலேபுல்குவன்மடிமேல்வைப்பன் ...... *
முத்தமுமிட்டுக்கொள்வன்முந்தியேபாலுஞ்சோறும் .... *
துய்த்திடவளிப்பன்மார்பிற்றாங்கவும்பழித்திக்கொள்வன் .. *
மெத்தவுங்களித்துநெஞ்சில்விருப்புடன்வளர்த்தபின்னர்.(௫)

மனையவள்யாகசேனிவயிற்றினிற்கருப்பங்கண்டே ..... *
சுனைவளர்குவளையுண்கட்டோகைநல்லாளேநீயோர் ..... *
தனயனைப்பெறுவாயென்றான்சதுமறைத்தலைவனாகி .... *
தினையுநங்குலமுங்காப்பனிதியமும்படைத்துவாழ்வன்...(௬)

வயதொருநூறிருப்பன்மன்னவன்சித்தமெச்ச ··········*
நயபுரோகிதமுஞ்சொல்லிநலங்களும்பெறுவனென்றே····*
தயவொடுதேவசன்மாசாற்றலுந்தேவியான············*
கயனெடுங்கண்ணாளென்னகாரியஞ்சொன்னாயென்றே····(௭)

காணுமுன்கேட்குமுன்னேகாரியங்களைநினைந்து·········*
வீணிலேபூமியின்மேல்விழுந்துருண்டழுதுநெஞ்சம் ····*
நாணினன்பிரமசாரிதாடிலங்கதுபோனியும்·············*
பூணணிமார்பவீணைபுகலவொண்ணாதென்றாளே·· ···(௮)

(பொரிமாத்தோண்டியையுடைத்தகதை.)

உரைத்திவக்கதையேதென்னவோதுமோர்நகரந்தன்னில் *
தரித்திரபிரமசாரிசார்ந்தொருசிரார்த்தத்துண்டான்·· [தாம்
அரைத்திடும் பொரிமாத்தோண்டியவற் கொருமறையோ னீந்
திருத்தியிற்பருப்புஞ்சோறுந்தின்றதோர்மயக்கத்தாலே ௯.

மற்றொருநகர்க்குச்செல்லும்வழியிலோர்மணற்றடத்தில் *
சற்றொருகணப்போதங்கேதரித்தவனிருந்துநெஞ்சில் ····*
உற்றகாரியங்கள்கோடியுன்னினனிந்தமாவை ··········*
விற்றுநாமாடுவாங்கிமேய்க்கிலோரிரண்டுகுட்டி. ·······(௰)

போடுமவ்விரண்டிலொன்றுபொலிகடாத்தன்னைவிற்று·· *
நாடுபெண்ணாடிரண்டுநயவிலையாகக்கொள்வேம்··········*
ஆடொருநாலாமந்தவாடுகளிரண்டிரண்டாப் ···········*
போடுமக்குட்டியோடேபொருந்தியபனிரண்டாமே. (௰௧)

பன்னிரண்டாடும்விற்றுப்பசுக்களோரிரண்டுகொள்வோம்··*
தன்னிலேபட்டிமேய்ந்துதருக்கியேயிரண்டுமீனும்······ *
மன்னுபானெய்யும்விற்றுமற்றிருபசுவுங்கொள்வோம் ····*
அன்னவப்பசுக்களாறுமாறுசேங்கன்றுநல்கும் ····· (௰௨)

மூவணையேருங்கூட்டிமுன்னூறுநிலங்களெல்லாம்·········*
ஓவறவரங்களாகவுழுதுநாம்பயிர்களிட்டே············ *
மேவுதானியங்களெல்லாம்விலைகளைக்குறையவிற்றுக்······*
காவலனறிக்கையாலேகணக்கவோர்வீடுகட்டி········ (௰௩)

இருந்துநாம்பணமுங்காசுமேமொடுபொருளுந்தேடிப் .. *
பொருந்தியபிராபணர்க்குப்போசனமிடுவோமிட்டால் .. *
வருந்தியேநமக்குப்பெண்ணும்வலியவேதருவாரந்தத் ....*
திருந்திழையாளுநாமுஞ்செருக்கியங்கிருக்குநாளில் .. (மச)

மாரனுமிரதியுமருவியவாறுநாமும் ..............*
சேருவோஞ்சேர்ந்துநல்லசேயையும்பெற்றெடுத்துப் ....*
பேருறுசோமசன்மாவென்றுபேரிட்டவ்வூரில் ....... *
காரகஸ்தனுமாய்வாழ்வுகனம்பெறவிருப்போமென்றும்.மரு

அப்படியிருக்குநாளிலந்தியிற்பசுக்கள்கட்டக் ...  .... *
கொப்படர்கண்ணுள்செல்லக்குழந்தையுமழுநாமோடி....*
இப்படியடிப்போமங்கேயென்றொருதடியெடுத்துச் .... *
செப்பியபொரிமாத்தோண்டிசிதறிடவடித்திட்டானே.(மசா)

கலங்கினன்பிரமசாரிகாரகஸ்தங்களெல்லாம் .... ...... *
துலங்கியபொரிமாவைத்ததோண்டியோடழிந்ததென்றே *
மலங்குகண்ணீர்கள்சோரவயிற்றினிலடித்துக்கொண்டே ..*
நிலந்தனிற்புரண்டுவீழ்ந்துநெடுந்துயரடைந்தானன்றே.மஎ

(கீரிப்பிள்ளையைக்கொன்றகதை.)

ஆதலாற்காணுமுன்னேயகத்தினுண்ணேக்கொணுதென் .... *
றோதியயாகசேனியுடனவனிருக்குநாளில்.... ......*
தீதிலாமுகூர்த்தந்தன்னிற்செல்வனும்பிறந்தானந்தச் ....*
சூதகங்கழிக்குநாளோர்சுனையினின்மூழ்கப்போனுள். (மஅ)

ஆயிழைபோகையாலேயாரணமுழுதும்வல்லோன் ......*
சேயினைக்காத்திருந்தான்சிரார்த்தமென்றரசன்றூதர் .... *
நீயவண்வருகவென்றூர்நேரமுஞ்சென்றுபோனல் ...... *
போயதையெல்லாம்வேறுபுரோகிதர்கொண்டுபோவார்.மகூ)

என்றுதன்மனத்திலெண்ணியின்பமாவளர்த்தகீரி .... .... *
தன்றுணையாகவந்தத்தனயனைவைத்துநீங்கிச் .......... *
சென்றனனரசன்வீட்டிற்சிரார்த்தமுமுடித்துப்பெற்று .. *
வொன்றுகிலரிசியெல்லாம்பொதிகளிலேற்றிக்கொண்டே.உம

வருமுனேசேயைக்கிட்டிவந்ததோர்நாகமந்தக் ........ ※
கரியநாகத்தைக்கீரிகடித்திரு துண்டமாக்கிக் ........... ※
குருதிவாயெங்குமாகக்கொண்டுசந்தோஷங்காட்ட ...... ※
அருமறையோன்முன்சென்றதாகெடுத்தாயோவென்றே (௨௧)

தண்டினாலடித்துக்கொன்றான்றளர்வொடுவீட்டில்வந்தான் ※
கண்டனன்பிள்ளைமுன்னேகரியபாம்போவிரண்டு ...... ※
துண்டமாக்கடிக்கப்பட்டுத்தூரவேகிடக்கக்கண்டான் .... ※
மண்டியதுயரமாகிவயிற்றினிலடித்துக்கொண்டான் .. (௨௨)

வாயினுமடித்துக்கொண்டான்மண்ணையும் போட்டுக் கொண்
சேயினுமதிகமானசேயைநான்கொன்றேனென்றான் [டான்
நீயெனக்கெதிரோவந்துநின்றெனைக்கெடுத்தாயென்று .... ※
போயதன்மேல்விழுந்துபுரண்டுருண்டரற்றினானே... (௨௩)

தேவியுமூழ்கிவந்தாள்தேவசன்மாவைநோக்கிப் ........ ※
பாவியிங்கேதுகீரிப்பாலகனிறந்ததென்றே ........... ※
ஓவெனவலறிநின்றாளுற்றவாறவனுஞ்சொன்னான் ........ ※
காவியங்கண்ணிதானுங்கனவிடுமெழுகொத்தாளே. (௨௪)

(நாவிதனிறந்தகதை.)

ஐயையோவிசாரியாமலருங்கொலைவந்ததேநாம் ........ ※
செய்யுமாறென்னவென்றேதேவசன்மாவைநோக்கிக் .... ※
கையறவிசாரியாமற்கண்டதுகொண்டடித்து ........... ※
நையவேயிறந்துபோனநாவிதன்கதைபோலென்றாள் (௨௫)

நாவிதன்கதையேதென்னநகரமொன்றதிலோர்செட்டித் .. ※
தேவிதான்பிள்ளைபெற்றுடையநாண்முகூர்த்தத்தாலே .... ※
சாவர்தாய்தந்தையிச்சேய்தரித்திரனாகிப்பின்பு ........... ※
மேவுநன்செல்வமென்றுவிளம்பினர்கணிதநூலோர். (௨௬)

பயந்துதான்வணிகனந்தப்பாலனையெறிந்துபோட்டான் .. ※
அயர்ந்தவன்றேவிமூர்ச்சையாகியேவீழ்ந்திறந்தாள் ...... ※
நயந்தருந்தேவிபோனாணமக்கினிவாழ்வேதென்று ...... ※
சயந்தருவணிகனாவிதனாகப்போக்கிக்கொண்டான். ... (௨௭)

இப்படியிவர்கள்செத்தாரிவையெலாமரசன்கேட்டே..... *
தப்பறவணிகனீட்டுந்தனமெலாமெடுத்துப்போனான் .... *
முப்பழியாமோவென்றுழறியளோர்தாதியந்தக்........ *
குப்பையிலெறிந்துபோட்டகுழவியையெடுத்துப்பார்த்தாள்
(உஅ)

இழைத்தநாள்வராமையாலேயெத்தனைசிறுமைப்பட்டும்.. *
பிழைத்துகிடக்கவந்தப்பிள்ளையையெடுத்துப்போய்த்தான்
உழைத்ததன்கூலியாலேயொருத்தியைமுலைகொடுக்க.... *
அழைத்துவந்தவண்முலைப்பாலருத்துவித்தவள்வளர்த்தாள்.
(உகூ)

வளர்ந்தனன்செட்டிபாலன்வயதொருபதினாறும்...... *
இளந்தலைப்பட்டுக்கொண்டேயிருந்தனன்றரித்திரத்தால் ..*
உளந்தடுமாறியோர்நாளுறங்கியநாளிலாங்கோர்........ *
வளர்ந்தருசித்தன்வந்துவருந்தநீவேண்டாமென்றே....(௩௰)

விடியுமுன்னெழுந்திருந்துவீடெலாஞ்சுத்திபண்ணி...... *
முடிமயிரிறக்கிக்கொண்டுமுழுகிவெண்ணீறுபூசித் ...... *
தடியுமொன்றெடுத்துக்கொண்டுதன்மனைமுன்றிறன்னில்..*
கடிகைமூவைந்துமட்டுங்காத்துநீயிருக்கிலாங்கே. .... (௩௧)

மதியமாம்வேளைதன்னில்வருவர்பிக்ஷைக்குமூவர்........ *
பதறிநீயெழுந்திருந்துபார்த்துநீயவராமூவை .......... *
சிதறிடவடித்தாலந்தச்சித்தர்கண்மூவர்மூன்று ........ *
நிதிகளாயிருந்துநெஞ்சினினைத்ததுதருவாரென்றான். (௩௨)

விழித்தனனவனைக்காணான்வீடெலாஞ்சுத்திபண்ணி ...... *
அழைத்துநாவிதன்கையாலேயவன்பணிகொண்டுமூழ்கிக் ..*
குழைத்துவெண்ணீறுபூசிக்கூறியநேரமட்டாக்.......... *
கழைத்தடிகையிற்கொண்டுகாத்தவனிருந்தான்மன்னே(௩௩)

அப்படிதானேமூவரந்தவேளையினில்வந்தார்.......... *
கொப்பெனத்தடியினாலேகொண்டவனடித்தபோதில் .... *
தப்பறவவருமங்கேதமனியமாகக்கண்டான்.......... *
செப்பியவாறெடுத்துத்திருமனைதனில்வைத்தானே....(௩௪)

கண்டனனுவிதன்றன்கருதியவ்வாறுதானும்
ரூண்டிதழுகிவந்தழலைத்தடியான்மோத
விண்டுயிரிறந்தாரந்தவேளையிற்காவலாளர்
கண்டனரவனையையோகழுவினிற்போட்டுவிட்டார். (௫௫)

தீரவேவிசாரியாமற்செய்யுமோர்கருமத்தாலே
பாரியமனைவியாதிபற்றிடுமுயிர்க்குங்கேடாம்
காரியந்தப்பினாலுங்கருதியோர்குறிப்பினாலே
தேருவார்க்கின்பமெய்துஞ்செட்டியார்கதைபோலென்றாள். (௫௬)

(செட்டிகதை.)

செட்டியார்கதையேதென்னத்திருந்துமோர்பட்டணத்தில்
மட்டிலாச்செல்வனானவணிகனுங்குபேரதத்தன்
கட்டழகுடையதேவிகாமசஞ்சீவியந்த
மட்டுலாங்குழலாளீன்றமைந்தனுமனங்கமித்திரன் (௫௭)

தேவியும்வணிகன்றானுஞ்சேயொடுசெருக்கிவாழ்ந்து
மேவியங்கிருக்குநாளில்விரிகடற்கப்பலேறிப்
போவதுகருமமாகப்புந்தியில்வணிகனெண்ணிக்
காவியங்கண்ணிநீயுன்கற்பினைவிடாதேயென்றும் (௫௮)

சேயினையபூர்வவஸ்துசேர்ந்திடில்விடாதேசெம்பொன்
ஆயிரங்கழஞ்சானாலுமளித்ததைக்கொள்வாயென்றும்
போயினன்கப்பலேறிப்பசினாற்றிசைபுரண்டோர்
மாயிருந்தீவுசேர்ந்துவாணிபஞ்செய்திருந்தான் (௫௯)

அங்கவன்மீண்டுசெல்லவனேகநாள்சென்றதந்தப்
பைங்கொடியீன்றபாலன்படித்தனன்கலைகளெல்லாம்
இங்கிதுநிற்கவேறொழினகரத்தில்வாழும்
துங்கமாயமறையோனானசோமசன்மாவென்பானும் (௬௰)

ஓதினன்கலைகளெல்லாமுலகெலாம்புகழநித்தம்
தாதையிங்கிவனைச்சீறத்தாய்தனைநோக்கியானும்
போதுவன்பரதேசத்திற்புகலுநின்கணவற்கென்றே
கோதமாய்ச்சொன்னான்பின்னுங்கொடுந்தொழிலினைந்துமீ
[ண்டான். (௬௧)

இவனை நாங்கொல்வோமென்றே யெண்ணியோர் கல்லைக்கொ
கவடமாய்ப்பரணிமேலறிக்கரந்தனன்றாயுங்காணார்.... [ண்டு
தவளை நான்மார்பன்வந்து தனயனுண்டனனோவென்றான் .. *
அவனை நாமெங்கேகாண்போமவன்பரதேசம்போனான்(௪௨)

என்னவேகலங்கிமைந்தனேறினாற்போனானென்று.......*
தன்னிருகண்ணீர்வாரச்சதுமறையோனுங்கேட்டான்.....*
அன்னவளழுதுகொண்டேயருங்கலைகற்றபிள்ளை....:....*
தன்னையெந்நேரஞ்சீறுந்தன்மையாற்போனானென்றாள்(௪௩)

பேதையேநாம்புகழ்ந்தாற்பிள்ளைதான்செருக்கடைந்து..*
போதனைமறப்பானென்றுபுத்தியேசொன்னேனென்றான் *
பாதகநினைந்தோமென்றுபரணினுமிறங்கிவந்து.........*
தாதைபாதத்தில்வீழ்ந்தான் றனயனைத்தழுவிக்கொண்டான்.
(௪௪)
மைந்தனுமையாவுன்னைவதைத்திடநினைந்தபாவம்........*
எந்தமாதவத்தாணீங்குமெனக்கருள்செய்வாயென்ன .....*
அந்தணனீபோய்நின்வேட்டகத்திலேசிலநாளுற்றால் ... .*
சிந்தையினினைந்தபாவந்தீருநீசெல்கவென்றான்......(௪௫)

ஏகினான்சோமசன்மாவெதிர்கொடுவந்தாரந்த...........*
மாகவேதியர்களெங்கண்மாப்பிள்ளைவந்தானென்றே......*
பாகுபால்பருப்புநெய்தேன்பாயசம்பணியாரங்கள்......*
ஓகையாய்விருந்துசெய்தாருண்டுகொண்டவனிருந்தான்(௪௬

தினமொருநீதிப்பாட்டுச்சீட்டினிலெழுதிக்கட்டித் .......*
தனதுமஞ்சத்தின்மேலே தலையணைக்கீழேவைத்தான்......*
பினைவரவரவெறுத்துப்பேசினாரொருநாளன்னான் ......*
மனைவியையழைத்துநீதான்வருக்கவொண்ணாதோவென்றார்.
(௪௭)
என்னநான்சொல்லவென்றாளிப்படிநீரிருந்தால்...........*
பொன்னிலைசெலவுக்கென்றுபுகலுநீயெனச்சொன்னார்கள் *
மின்னுமவ்வாறேசொன்னாள்வேதியன்சீட்டிலொன்றை ..*
அன்னவள்கையிலீந்தீதாயிரம்பொன்னென்றானால் ...(௪௮)

தையலுஞ்சீட்டைவாங்கித்தமையனார்கையிலீந்தே······*
மெய்விலையாயிரம்பொன்விற்றுநீவருகவென்றாள்······*
கையிலேவாங்கிமிக்ககவிதையைவாசித்தந்த··········*
ஐயனீதாயிரம்பொன்னதிகமேபெறுங்காணென்று ·· (௪௯)

போயினன்பட்டணத்திற்புகுந்தனன்சீட்டைக்காட்டி····*
ஆயிரம்பொன்னீதென்றானவரவர்வாங்கிப்பார்த்துப்····*
பேயபோவென்றார்கொண்டுபின்னுமோர்தெருவினிற்றன் *
வாயிலில்வரும்போதந்தவணிகனார்மைந்தன்கண்டான் (௫௰)

சீட்டிதுவிலைசொல்லென்றான்செம்பொனாயிரமாமீது····*
தாட்டிகர்கொள்வரொன்றான்றானவையெண்ணிநல்கிச்····*
சீட்டினைவாங்கிக்கொண்டோர்செய்யபட்டாலேசூழ்ந்து··*
வீட்டிலேதூங்குமஞ்சமேலுறத்தூக்கிவைத்தான்····(௫௧)

செட்டியுமீரைந்தாண்டுசென்றபின்றிரும்பிவந்து······*
பட்டணக்களைகண்டோடிப்பாய்களுமிறக்கிநாவாய்····*
விட்டொருபடவிலேறிவீட்டினிற்கருமம்பார்க்க········*
ஒட்டியேபாதியல்லிலொளித்துவந்தகத்திற்புக்கான்···(௫௨)

அன்னையுந்தானுங்கூடியருந்தியோர்தூங்குமஞ்சந்·······*
தன்னிலேயுறங்கக்கண்டுதானிவன்சோரனென்று·········*
மின்னும்வாளுறைகழித்துவெட்டவேசெல்லும்போது ·*
மன்னியசீட்டுத்தொங்கமற்றிதேதென்றுபார்த்தான்···(௫௩)

பட்டினாற்சூழ்ந்துகட்டிப்பாதுகாப்புற்றசீட்டை······*
விட்டுவாசித்தானென்றும்விசாரியாமற்செய்தோர்கள்···*
கெட்டுமாய்ந்திடுவர்பின்னுங்கேடறவிசாரித்தோர்கள்····*
மட்டிலாச்செல்வம்பெற்றுவாழ்வரொன்றிருந்ததன்றே.(௫௪)

சீட்டினைமெல்லவைத்துச்செறியிருள்விடிந்தபின்பு······*
வீட்டினில்வந்தானந்தப்பெண்கொடிபணிந்துநின்றாள்····*
தாட்டிகமைந்தன்றானுந்தாளினில்வீழ்ந்தான்றன்பெண்··*
டாட்டியையிவனொன்றானனங்கமித்திரனாமென்றாள். (௫௫)

புல்லினன்மோந்துகொண்டான்புதல்வனையருகிருத்தி ....*
மெல்லியறன்னைநோக்கிவிளைந்தவாறுரைத்தேயிந்த ....*
நல்லசிட்டாற்பிழைத்தானம்பியென்றவனைநோக்கிச் .....*
சொல்லிதேதென்றுகேட்டாள்சொல்லுவானிகழ்ந்தவண்ணம் (௫௬)

நீயெனக்குரைத்துப்போனநீதியைநினைந்துகொண்டே ..*
ஆயிரஞ்செம்பொனீந்தேதையையயான்கொண்டேனென்றான்*
சேயினைத்தழுவிக்கொண்டுசெம்பொனேர்கொடியன்றே *
நீயெனக்கென்றுகூறிநேசமாய்வாழ்ந்திருந்தான். ...(௫௭)

கண்ணினிற்காணுமுன்னங்கருத்தினில்விசாரியாமல் .....*
பண்ணுமோர்கருமத்தாலேபாவமும்பழியும்வந்து .....*
நண்ணிடுமுயிர்க்குங்கேடாநலமுடன்றெளிந்துசெய்தால் *
புண்ணியகீர்த்திமிக்கபொருளும்வந்தெய்துமென்றாள். ௫௮.

பின்னும்வேதியனைநோக்கிப்பேசுவாள்யாகசேனி ..... *
மின்னுமென்கருப்பங்கண்டுமகிழ்ந்துநீயுரைத்தவெல்லாம் *
நன்னெறியல்லவீனாய்நகைக்கிடமாகுமென்று .... .... *
முன்னமேசொன்னேனின்றுமுடிந்ததீவினைபாரொன்றே. ௫௯

ஆர்க்கும்பேராசையாகாதந்தணனொருவன்முன்னாள் .... *
தீர்க்கரும்வறுமைதன்னைத்தீர்க்குநாள்வந்தபோது ......*
போர்க்கும்பேராசைகொண்டுபொருந்தினன்றுயரமென்று
தார்க்குழாலதுசொல்லென்னத்தையலுஞ்சாற்றலுற்றாள். [௬௰

(வேறு-பேராசைகொண்டுபேதுற்றகதை.)

மன்னுமமராவதிமேவுமறையோர்நால்வர்வறுமையினால் ...*
இன்னலடைந்தோர்யோகிதனையெய்தியிதனைத்தீர்த்தருளீ *
என்னவேண்டவவன்றானிரண்டுசித்திதமையெண்ணிப் ..*
பண்ணுமவர்தந்தலைமீதுபரிந்தொவ்வொருவர்த்திரியைவைத்து.

நீவிரிமயவரைநோக்கிநெடுந்தூரஞ்சென்றிடினவன்மேல் *
மேவுவர்த்திவிழுகின்றதவனுக்கங்கேவேண்டுநிதி .. ....*
பூவினிருக்குங்கொள்கவெனப்போனார்போகும்வழிநடுவே *
நாவிலொருவன்வர்த்திவிழக்கண்டானங்குதாமிரமே. (௬௨)

மூவர்தமக்குங்காட்டியிதைமுறையால்வாரிக்கொள்வமெனக் *
கூவநீயேகொள்கவிதிற்கூடும்பயனென்றெனவவனும் ... *
தேவனமக்குத்தந்ததிதுவென்னக்கொண்டுசென்றனன்பின் *
ஆவலுறுமூவரும்போம்போதங்கேவீழ்ந்ததொருவனுக்கே.
(௬௩)

வெள்ளிதனைக்கண்டவனுமவ்வாறுரைக்கமேனுமாசையுற்றோர் *
உள்ளதுனக்கேயிதுவென்னவுரைத்தாருற்றனவன்கொண்டு *
மெள்ளச்செலவங்கொருவற்குவீழத்திரிபொன்னுறல்கண்டு *
கொள்ளுவாமீதிருவருமென்றேதக்கொளும்போராசையால் *
(௬௪)

நீயேகொள்கென்றுரைத்தொருவனீங்கநீயும்வந்தபின்பு .. *
தூயோயூர்க்குச்செல்வமெனச்சொல்லவிரைவின்வந்திடுவன் *
தாயேயனையாயிருவென்றுசாற்றிப்போனனவ்விடத்துச் ... *
சாயாதொருசக்கரமொருவன்றலையிற்சுழலக்கண்டனனால். ௬௫

கண்டுநீயாருன்மேற்சக்கரந்தான்சுழலுங்காரணமென் .. *
விண்டுபுகலென்றிடவவனைவிட்டுக்கேட்டவிவன்றலைமேல் .. *
பண்டுசுழன்றதெனச்சுழலப்பயந்தீதென்றேகினறுவெட்ட *
மிண்டுபூதம்புறப்பட்டாற்போலவிளைந்தவேதனையே. (௬௬)

என்னக்கவலையுடனவனைக்கேட்கவவனுமியம்புவான் ...... *
முன்னைக்குபேரன்சாபத்தாலென்மேற்சுழன்றமுனையாழி *
உன்னைக்கண்டாற்றீருமெனவுரைத்தானன்றேயவ்வாறே .. *
நின்னைக்கண்டவெனைவிடுத்ததெனுமவர்த்திதொடுந்தலையன்.
(௬௭)

வருந்திப்பிள்ளையார்பிடிக்கக்குரங்காய்முடிந்தவாறதுபோல்
பொருந்திற்றென்றுதுன்புற்றுப்புகலாயிங்கெத்தனைநாளா *
இருந்திட்டனையென்றிடக்காலமெனக்குத்தெரியாசீராமன் *
திருந்தப்புவியாள்காலமென்றுசெப்பினன்முன்றிகிரிதரன்.
(௬௮)

தருவார்நீர்சோறன்னத்தாகம்பசியிங்கில்லையெனத் .. *
திருவார்குபேரனிதிகவரச்சேர்வார்தம்மையச்சுறுக்கப் .. *
பெரிதாவைத்தவாழியென்றுபேசிப்புகன்றான்பின்புமுன்பு *
பரிவாய்க்காத்தசுவர்ணசித்தியார்த்துப்பார்த்துக்கண்பூத்தே.

தேடிவருங்காற்சக்கரந்தான்சிரமேற்சுழலவனிருத்தல்.. ❋
நாடியிதுவென்னெனக்கேட்கநண்பாபேராசையின்வந்த ❋
பாடென்றுனாக்கச்சுவர்ணசித்தியயந்துபிள்ளைவரந்தேடிக் ❋
கூடுபுருஷன்றனைப்பறிதான்கொடுத்தாற்போலாயிற்றென்றே
(எ0)

சற்றேகலங்கிப்பின்றெளிந்துசாற்றும்வெள்ளைப்புத்தியினூர் ❋
மற்றோரறிவைக்கேளாமன்மாண்டசிங்கமுயச்செய்து.... ❋
கற்றேயுறுமந்திரவலியைக்காட்டுங்கதைபோலானதென்றான்
மற்றேததுசொல்லெனக்கேட்கவகுப்பான்சுவர்ணசித்தியே.
(சிங்கத்தைப்பிழைப்பித்துச்செத்தகதை.) (எக)

துளசாபுரத்திலொல்வொருதொடர்பாய்க்கல்வியின்றோர்கள்
வளமாமவரின்னொருமூவர்மந்திரத்தின்மிக்கமையால்...... ❋
தளமாரரசன்றனைக்கண்டுதங்கள்வித்தைத்திறங்காட்டி.... ❋
ஒளியார்தனங்கண்மிகவீட்டற்குன்னித்தம்முட்கூறுவார். எஉ

இவன்றன்மிக்ககல்வியிலனெனினுநம்மோடிருந்துபடித்.. ❋
தவனுதலினுமொருபங்குதருவோமென்றங்குடனழைத்துப் ❋
புவியாளரசனிடைப்போகும்போதிலந்தவழியினிடைச்.. ❋
சவமாஞ்சிங்கந்தனைக்கண்டுதம்மந்திரஞ்சோதிக்கவெண்ணி.
எ௩)

கற்றவித்தையாற்செத்தகண்டீரவத்தையெழுப்புவேன்.. ❋
மற்றையவர்க்குச்சம்மதமோவென்னமந்திரந்தெரியா.... ❋
சுற்றவொருவனெழுப்பிலதுகொல்லுமென்னவுரைத்திடலும்
பற்றியவனைத்தள்ளவவன்பயந்தோர்மரத்திலேறினான்.. எச.

எழுப்பினார்பின்பதுகொல்விறந்தாரம்மூவருமிதனால்.. ❋
இழுக்கிலாதகல்வியினுமறிவேபெரிதென்றிசைத்திடலும் ❋
ஒழுக்கமறுநேமித்தலையனூழேபெரிதென்றொருகதைதான் ❋
பழுத்தசெம்பொன்பெற்றோற்குப்பரிவதாகப்புகல்வானே
(அறிவின்மிக்கமீன்களிறந்தகதை.) (எரு)

மறுவின்மகததேயத்துமலர்ப்பொய்கையினில்வீற்றிருக்கும்
அறிவாயிரத்தனூற்றறிவனெனும்மீனிரண்டோடங்கிருக்கும் ❋
பெறுமோரறிவனெனுந்தவளைபிரியாதுறைந்ததத்தவளை.. ❋
உறுகால்வலைஞரொருநாளங்குற்றுப்பேசுமுரைகேட்டே.

இருமீன்களையுந்தானோக்கியிங்குநாளைவலைஞன்வந்து . . . *
பெருமீனெல்லாம்பிடிப்பனென்றுபேசினான்யாமிப்போதே
ஒருநீர்த்தடத்துக்கேகுவதுநன்மையென்னவுரைத்திடலும் *
அருநீர்நடையின்மிகவல்லேனென்றானறிவாயிரத்தானே. ௭௭.

நிலையிற்பெயரலாகாதென்றுரைத்தாணிகழுநூற்றறிவன் . . *
அலையிற்றிகழுந்தவளைநானகல்வனெனப்போதலும்பின்னாள் *
வலைஞன்மீனங்களையெல்லாம்வாரிக்கொண்டுபோம்போது *
கொலையிற்படுதன்னட்பினைக்குலவோரறிவன்கண்டனனே.
(௭௮)
பெட்டைதனக்குமதுகாட்டிப்பேசுமென்றன்சொற்கேளா *
மட்டியறிவாயிரத்தனொடுவளர்நூற்றறிவன்சுற்றமொடு . . *
பட்டபாடுமெனதிருப்பும்பாரொன்றுரைத்ததனாலே . . . . *
தட்டின்மிக்கவறிவனையுந்தீயூழ்வந்துதடுக்குமென்றான். (௭௯)

(இசைபாடிக்கழுதையிடருற்றகதை.)

பரிதிதரனிவ்வாறுரைக்கப்பைம்பொன்பெற்றோனில[illegible]
ஒருபுன்கழுதைக்குற்றதுபோலுனக்கிவ்விடர்தானுற்றதெனத்
தெரியவதுகூறென்னநெடுஞ்செவியனென்னுமொருகழுதை *
பொருவில்சுமதிநரியினொடுபுலத்திற்பயிர்மேய்ந்துநாளில்

மேவுமொருநாள்விலாப்புடைகள்வீங்கமேய்ந்துதேக்கெறி
தாவில்கழுதைநிலவெறிக்குந்தண்ணாரிரவினிற்பொழுது [ந்து
போவதற்குச்சங்கீதம்புகல்வேனீங்கெளெனநரியும் . . . . . . *
ஏவுமுனதுகுரல்கேட்டாற்கொல்வார்பயிர்காத்திடுவாரோ.

என்றுசொல்லக்கேளாமலிராகம்பாடக்குரல்கேட்டே . . *
ஒன்றுகழுதையெனவுழவருடம்புநுறுங்கப்புடைத்திட்டார் *
அன்றுநரிதான்மாமாவென்பேச்சைக்கேளாவகந்தையினால் *
இன்றுபட்டாயெனவேசிற்றென்றான்பொன்பெற்றன்றானே.

(தகாவரம்பெற்றுச்சாலியனிறந்தகதை.) (௮௰)

நிந்தையில்சுவர்ணசித்திநிக்ஷ்த்தியகதையைக்கேட்டே . . *
இந்தநற்கதைகேளென்றேயியம்புஞ்சக்கரதரன்றான் . . . . *
நந்துழுதடங்கள்சூழுநாரணபுரத்தில்வாழும் . . . . . . . . . *
மந்தரநாமன்றந்துவாயன்வத்திரங்கணெய்வோன் . . (௮௧)

(வேறு.)

தறிமரமுறிதலாலேதக்கநன்மரம்வெட்டற்குச் ......... *
செறிவனந்தன்னிற்சென்றுதிரிந்தொருவாளைகைகண்டு ...... *
முறியடவெட்டுதற்குமுயலும்போததன்மேனின்ற ...... *
அறிவுறுமியக்கனோக்கியவனொடுமொன்றுசொல்வான். (௮௪)

இந்தவென்னிடத்தைவெட்டாயென்னினீயிச்சைகொண்டு *
வந்தநல்வாழ்வீவேனென்றனன்மகிழ்ந்துமீண்டு ......... *
நத்தலினட்பாயுள்ளநாவிதன்றன்னைக்கேட்க ........... *
மந்திரியாவேனாலீயரசுமும்வரங்கேளென்றான் .... (௮௫)

மனைவிபோழுதையுரைக்கமற்றவளரசுபெற்றால் .... .... *
கனவிடையூறுமேவுமாதலாற்காதலா நீ ................ *
இனமொருதலையுங்கைகளிரண்டும்பெற்றுற்றாயானால் .... *
தினமிருதறிவிரித்துச்செய்யலாம்வேலையென்றாள் .... (௮௬)

மாலையங்குழலாள்சொன்னவார்த்தையேநல்லதென்று .... *
சாலியன்சென்றுபெற்றுத்தன்னகருற்றான்கண்டோர் .... *
ஆலநேரரக்கனுமென்றானுக்கோர்கல்லைக்கொண்டு ....... *
மேலுறவெறிந்தார்செத்தான்மெய்விகாரங்கொண்டோனே.

சக்கரதரனிவ்வாறுசாற்றியகதையைக்கேட்டே ........ *
இக்குவலயத்தொருத்தற்கிதமொழித்தகிதஞ்செய்தால் .... *
துக்கமேயடைவனொன்றுசுவர்ணசித்தியுமுரைக்க ........ *
அக்கதைசொல்லுகென்னவவன்றனக்கறையலுற்றான். .. ௮௮.

(குரங்குபழிவாங்கியகதை.)

தவமிகுமயோத்தியாளுஞ்சந்திரசேனன்றன்சேய் ....... *
கவிகளினுடல்காணுங்கருத்தறிந்தொருசாலைக்கண் ...... *
சவிபெறுகுரங்கனேகந்தான்வளர்த்திடுமந்நாளில் ...... *
புவிபுகழரசனேவல்புரிபவர்சண்டையிட்டார் ...... (௮௯)

ஒருகுரங்கதுகேட்டுத்தன்னுறவினர்க்குரைக்குமிப்போர் *
பெருகுறிற்றீதாமற்றோர்வனத்தினும்பெயர்வோமென்ன *
உரைசெயக்கிழநின்சொற்கேட்டுண்பதையறேமென்றேவா *
னரமெலாமிகழ்ந்துபேசநீங்கியக்கவனைவிட்டே .... (௯௰)

தன்குடும்பத்தினோடோர்கானிடைச்சார்ந்ததப்பால் . . . . *
பின்பொருநாளச்சண்டைபெரிதுறவவரிலேயோர் . . . . . . *
வன்பினன்கொள்ளிக்கட்டைமற்றவன்மேலேவீச . . . . . . *
முன்புறுகுதிரைச்சாலைமேலதுமூண்டதன்றே . . . . . . (௬௧)

சாலையுமெரியவாசிதாஞ்சிலவிறந்தவெண்ணில் . . . . . . . . . . *
கோலவெம்புரவிதீயிற்கொண்டனகாயமன்னன் . . . . . . . . . *
பாலடைந்ததனைக்காட்போர்பகர்தலுமந்நோய்தீர்க்கும் *
சிலனையழைத்துமாக்கடீயினோய்நீக்குகென்றான் . . . . (௬௨)

மருத்துவன்குரங்குநெய்யாலன்றிநோய்மாயாதென்றான் *
செருத்தொழிலிறைவன்சாலைசேர்ந்துளகுரங்கையெல்லாம் *
வருத்தியந்நெய்யைக்கொண்டுவாசிநோய்வாசியாக்கென் . . *
றுரைத்தனனவ்வாறேநோயொழித்தனர்மருத்துநூலோர்.

இப்பழியிறையிடத்தேவாங்குவேனென்றுமுன்போய் . . *
தப்பியகிழக்குரங்குதன்மனம்பதைத்தேயெண்ணி . . . . . . *
ஒப்பிலாப்பெருங்கானத்திலொருகுளமிருக்கக்கண்டு . . . . *
வெப்பறுபேயொன்றிங்குமேவவேவேண்டுமென்று. (௬௪)

எண்ணியக்குளத்திற்கஞ்சத்தாளினாலிருநீருண்ண . . . . . . . . *
நண்ணியபேய்கண்டங்குநணுகிநின்பெருமைகண்டுன் . . . . *
கண்ணெதிர்ப்பட்டேனென்றுகழுத்துறுமாலைதன்னைத் . . *
துண்ணெனவெடுத்துநல்கவாங்கியேசொலுங்குரங்கே. (௬௫)

எவ்வளவிந்தநீரிலுனக்குளவலிமையென்னச் . . . . . . . . . . *
செவ்வியோயிந்தநீரிலாயிரம்பேர்சேர்ந்தாலும் . . . . . . . . *
கைவ்வலித்துண்டற்கானசத்தியென்கண்ணுண்டென்ன . . . . *
இவ்விடம்புசிப்புனக்கேயான்கொடுவருவனென்றே. (௬௬)

மாலையைக்கழுத்திற்பூண்டுவானரமகன்றுவேந்தன் . . . . . . *
பாலடைந்திடவவன்றான்பார்த்திந்தமணியின்மாலை . . . . . . *
[illegible]னேயெங்குசம்பாதித்தனையெனக்குரங்கு . . . . . . . . . . *
கோலமாரொருகானத்திற்குளந்தானென்றுரைதமன்னா. (௬௭)

அக்குளந்தன்னிற்காலேயடைந்தமுன்குதிப்போர்க்கெல்லாம் *
இக்கதிர்மணிகளெய்தமெனச்சொலயானுமெய்தித் ......*
திக்கொளிவிரிக்குஞ்சோதிச்செழுமணிபெறுவேனென்று ..*
புக்கவக்குரங்கினேடும்போயினன்சேனைசூழ. ........௬௮

போனபினிதுவேகாலம்புகுந்ததின்சேனையெல்லாம் .... *
கானவிர்மலர்த்தடத்திற்களிப்பொடுகுதித்ததங்கட் .... *
கானநன்மணிகள்கொண்டபின்னரேயரசநீயும் ..........*
தானுமொண்மணிகள்கொள்வேமென்றதந்தாகந்தானே. ௬௯

அப்படியாகவென்றேயரசனுஞ்சேனையோரைக் ........ *
குப்புறுமென்னவோதக்குதித்தலுமவரைப்பற்றித் ...... *
துப்புறுநந்தானுந்தொடர்ந்திழுத்துண்டதங்கே ...... *
தப்புறுவந்தன்றானுந்தடத்திடைக்காத்திருந்தான் .... (௱)

நெடும்பொழுதங்குகாத்துநீரிடைக்குதித்தசேனை ........*
அடங்கலும்வராமைகண்டேயரசனக்குரங்கைநோக்கித் .. *
தடத்தனிற்குதித்தசேனைசார்ந்திலதென்னேயென்றான் ... *
நடந்தொருமரத்தின்கொம்பினுகமுன்னேறிச்சொல்லும். ௱௧

கொழிபுகழ்வேந்தனேயெங்குலத்தையெல்லாநீகொன்ற . *
பழிதனைவாங்கவந்தேன்முடித்தனன்பண்டுநின்சோ .... *
றழிபசிக்குண்டேனுதலாலுனைவிடுத்தேனென்று ... .....*
மொழிதரவிரங்கிவேந்தன்முந்துதன்னகர்புக்கானே ..(௱௨)

அத்தகுகருமஞ்செய்தாயாதலினினக்கித்துன்பம் ...... *
சித்தியாயினதென்றேதியுறைவிடஞ்செல்வேனென்றான் .. *
பத்திநீத்தென்னைவிட்டுப்போகுதல்பண்போயான்சொல் *
இத்தைநீகேட்டியென்றேயியம்புவான்சுவர்ணசித்தி .. (௱௩)

(குரங்குதன்புற்றகதை.)

பன்னுசீர்மதுராவாழ்வோன்பத்திரசேனவேந்தன் .......*
அன்னவன்புதல்விரத்தினுவதியழகின்மிக்காள் ..........*
தன்னையோராக்கன்பற்றச்சார்ந்ததைத்தோழிக்கோதச் . *
சொன்னதையாக்கன்கேட்டுத்துணுக்கமுற்றெண்ணுவானல் *

நம்மினும்வலியோனிந்தநாட்டமுற்றிவணிருந்தால்...... *
அம்மநானென்செய்வேனென்றச்சமுற்றரசனில்வாழ் .... *
செம்மைசேர்குதிரைப்பந்திசேர்ந்தொருகுதிரையாகி ....*
விம்மலுற்றிருந்தானந்தவேலையோர்கள்வன்வந்தான்.. (௱௫)

அரக்கனுங்குதிரைதன்னைக்கவர்ந்ததன்மேலேயேறிச்.... *
செருக்கொடுநடத்தநேரோசெல்லுறுமையினடிக்கத் .... *
தருக்கழிந்தோடல்கண்டுதழைந்தவோராலின்வீழை .... *
வெருக்கொடுபற்றியேறிமீதுசென்றனனக்கள்வன்....(௱௬)

குதிரையும்வெருவியோடக்குரங்கொன்றுகூவிச்சொல்லும்
பொருவிலாவரக்கனைபுரவியேமனிதனுக்கு.........*
வெருவுதலென்னேயென்னவிளம்பலுஞ்சோரன்கேட்டுப் *
பரியொடுகுரங்கின்வாலைப்பற்றியேவருத்தினனே ...(௱௭)

நீடுறுகுரங்குவஞ்சமுடைத்தெனநினைந்தரக்கன்... *
ஓடினனக்குரங்குக்குறுதுயரொனக்குமெய்தும் .... ....*
ஆடுறுசக்கரத்துக்கஞ்சினேனனென்றோது........ ....*
கூடிலூழ்க்கதையொன்றோதுமிடருற்றோன்பொன்னுந்றோற்
(வேறு-குருடன்முதன்மூவர்குணைப்பட்டகதை.) [கே
மதனூர்தனக்குக்காவலனுமதுசூதனற்குமும்முலைப்பெண் *
புதுமையாகப்பிறந்திடலாற்புரைதீர்சோதிடனையழைத்து *
முதுமையுடையிரிதற்குநான்முயல்வதென்னேயென்னவவன்
இதுநன்காய்ந்துசொலவேண்டுமாராயாமலிசைத்திட்டால்.

சண்டகருமன்செயல்போலாந்தலைவவென்னவவன்யாது ..*
பண்டுபுரிந்தானெனவவன்றான்பரவுந்தண்டகாரணியத் .. *
தண்டியுறைவானரக்கனவனங்குற்றிடுமோர்பூசுரன்மேல் ..*
மிண்டியேறிநடத்திவருநாளிலொருநாள்வேதியனும். (௱௰)

பாதமுனக்குமெல்லியவாயிருக்கும்பரிசுபுகலென்னப்.....*
பேதவரக்கனீராடியிரம்புலர்ந்தபின்செல்வேன்........*
ஆதலாலிவ்வாறிருந்ததென்றானொருநாளவ்வரக்கன்.....*
சீதநீரிற்குளிக்கும்போதோடினனச்செழுமறையோன்.௱௰௧.

அடியினீரம்புலர்வதன்முனப்பானடப்பதிலையென்ற ······ *
படியாலன்றேநலமைப்பிடிக்கமாட்டானென்று பார்ப்பானும்
நொடியினகன்றனனவரக்கவுறைந்தங்கிருந்தாலுதலால் ·· *
நெடிதாராய்ந்துசொல்லுதலேநீதியென்றான்சோதிடனும்.

பன்னூலாய்ந்துபுரவலனைப்பார்த்துநீநின்மகளெதிரோ ···· *
துன்னலாகாமையின்வேறோர்துலங்குமாடந்தனில்வைப்பாய்
என்னவவ்வாறவன்வைத்தேயிருக்குநாளிலவ்வணிதை ···· *
உன்னுமங்கைப்பருவமதையுற்றாளெனக்கேட்டரசனுமே.

இந்தமாதுதனைக்கொள்வார்க்களவினிதியோடீவனென்ன ·· *
அந்தமொழிகேட்டொருகுருடன்கூனன்மிசையூர்ந்தடுத்தாச
நந்தியென்னவக்கணமேதந்தான்குருடற்கவ்வூர்விட் ··· *
டெந்நாட்டாயினுநீபோகுமென்னவவர்போனார். (௱௰௪)

மற்றோர்நாட்டின்மூவரும்போய்வைகுநாளிற்கூனன்மிசை *
உற்றவாசைமிக்குருடனுயிலைப்போக்கவுபாயமிது ···· *
கற்றேறசெத்தபாம்பொன்றைக்கறியாக்கிடுதற்கடுப்பேற்றிச் *
சற்றேதீமூட்டெனக்குருடன்றானும்விறகிட்டெரித்திட்டான்.

வேகும்பாம்பினாவியவன்விழியின்மேலேதாக்குதலால் ···*
போகும்விழிகட்டிரிந்தனதூரத்திற்போகிக்குலாவுமவர் ··*
மோகங்கண்டுபோய்வளைந்தமுதுகன்றனையீர்த்தெறிந்தவள
தாவந்தன்னிலெறியநடுமூலையுமறைந்ததப்பொழுதே. (௱௰௫)

கூனன்கூனுநிமிர்ந்திட்டதாதலாலிக்குவலயத்தில் ········ *
ஆனதெய்வவருளுண்டேல்யாவுநலவாமென்றதன்பின் ···· *
தீநின்னகருக்கேகுங்காலென்றிக்குத்துணையோடேகெனமுன் *
போனதுணையிற்பயன்கொள்கதைபுகலுவான்சக்கரதரனே.

(வேறு-நண்டின்வழித்துணையாற்பிழைத்தகதை.)

நாசிகதேயந்தன்னினண்ணியதத்தனென்பான் ········· *
தேசிகன்கருடமுற்றச்செல்வனோரூர்க்கென்றேத ··· *
ஏசுறுவன்னைநீநற்றுணையொடுமேகுகென்றாள் ········ *
பேசுறுந்துணையின்றென்னப்பின்னுமவ்வன்னையெண்ணி ··*

அலவனைக்கலசத் துட்பெய்தவன்கையிலளிக்கக்கொண்டு.. ※
செலும்பொழுதிளைப்பாயாங்கோர்செழுந்தருநிழலிற்றூங்க※
நலிதரவிவனைத்தீண்டநல்லரவொன்றுநண்ணிக்.... ....※
கலசமுட்டலையைநீட்டக்கர்க்கடகந்தான்கண்டே....௱௰௯.

காரரவெனதினைந்துகடுங்கொடுக்காலிடுக்கி.... ........※
மாரணஞ்செய்யப்பின்னர்மறையவன்விழித்துப்பார்த்துப் ※
பேரரவதனைக்கொன்றதாரெனப்பெரிதுமெண்ணித் .... ※
தேருறுபொழுதுநண்டாற்செத்ததீதெனத்தெரிந்தான்.

மாதுருவாக்கியத்தையன்னுமென்சிரத்திற்கொண்டு......※
போதரலாற்பிழைத்தேனென்றவன்புகுந்தானென்று ... ※
தீதுளானதைக்கேட்டுச்சுவர்ணசித்தியுமவன்பால்.....※
ஆதரவாகப்பேசித்தன்னகரடைந்துவாழ்ந்தான்....(௱௨௧)

என்றிவைபலவும்பன்னியிரங்கலுந்தனதுபன்னி.......※
நன்றெனமறையோன்கேட்டுநாமறியாமலந்தோ.........※
இன்றுவந்துளதிப்பாவமெனமறைமுறையினுய்ந்து......※
பின்றைநற்கழுவாயாற்றிப்பிழைதீர்ந்திருந்தானன்றே.

கூறினான்சோமசன்மாகொற்றவன்றனுமைந்தர்.........※
தேறினாருபாயநீதித்திறமெலாமறிந்துகொண்டே....... ※
ஏறினாரரசன்முன்போய்விவேகத்தின்மாட்சிகாட்டி.......※
ஈறிலாவரசுபெற்றிவ்விருநிலம்புரந்துவாழ்ந்தார்....(௱௨௩)

அசம்பிரேக்ஷயகாரித்வதந்திரம்-முற்றிற்று.
ஆக விருத்தம்-௭௱௩௰௭.
பஞ்சதந்திரம்.

